பறவைக் குறிப்பு.

இராமநாதபுரம்

13.12.1970

இன்று காலை ஐந்து மணிக்கு எழுந்து 5.45 அளவில் பெரியகண்மாய்க்குச் சென்றேன். விடியாமலையும் காட்சி அழகாக இருந்தது. மேகமற்ற நீல. வான அம்பரம். அலைமோதும் சிறுகடல் போல் காட்சித்தந்தது ஏரி நிறைய பறவைகள். Terns, Gulls, Cormorants (3 types nearly 5000) வேறு சில பறவைகளும் இருந்தன. நீர் குறையும் போது பலவகையான பறவைகளும் வரும் என்றனர்.

வழியில் Open billed Stroke or Grey Heron கண்டேன்.

Rufous bellied Shrike ஒன்று பார்த்தேன்.

Ringed Pigeon ஒரு ஜோடி கண்டேன்.

நெய்தல் நிலப் பறவைகள் அதிகம். மீன் கொத்திகள் கொக்குவகைகள் மிகுதி. அடிக்கடி பல ஜாதிப் பக்ஷிகள் உருக்கும் செல்ல வேண்டும். சிறுபறவைகளும் நிறைய உள்ளன.

இராமநாதபுரம்

20.12.1970

வேறு வழியாக நடந்து பெரியகண் மாயை அடைந்தேன். காலை 7.15 மணி ஒரு Tern தவிர வேறு பறவைகளே தென்படவில்லை. சென்ற

வாரம் அவ்வளவு பறவைகள் தெற்கேக் கரையில் கண்ட எனக்கு ஒரு KM வடக்கே ஒருவாரம் கழித்து ஒருமணி நேரம் வந்தபோதும் ஒரு பறவையைக் கூடக் காணமுடியாதது வியப்பே. திரும்பும் போது நெல் வயல்களில் நிறைய நாரைகள் கொக்குகள் ஆகியவை கண்டேன்.

28.12.70 பஸ்ஸில் நயினார் கோயில் செல்லும் போது காவனூர் அருகே கண்மாயில் தண்ணீருக்கு இடையே கருவேல மரங்கள் நிறைய வளர்ந்திருப்பதைக் கண்டேன். இடையே ஒரு மரத்தில் பறவைகள் அமர்ந்திருப்பது தெரிந்தது. மற்றொரு குட்டி வேடந்தாங்கல் என நினைத்தேன்

2.1.1971 காவனூர்

இன்று பிற்பகல் காவனூர் சென்றேன். கண்மாயில் கருவேல மரங்களில் Storks உட்கார்ந்திருப்பதைக் கண்டேன். நீரில் ஒரு Pelican (Spotted Billed) நீந்திக் கொண்டிருந்தது. Darter ஒன்றும் கண்டேன். பெரும் கூட்டமாக நாரைகள் அமர்ந்திருந்தன.

நெருங்கிய போது எழுந்து குளத்தின் நடுத்திட்டை நோக்கிப் பறந்தன. மாட்டுக்கார பையன் நீந்திப் போய் முட்டை எடுத்து வந்ததாகக் கூறினான். Oct மாதம் தண்ணீர் இணையாக வந்தவுடன் பறவைகள் [கூடுகட்டி முட்டையிடும்] ~~வந்ததாகக்~~ கூறினார். கூறினார். அடிக்கடி சென்று பார்த்து வர வேண்டும்.

4.1.1971 இன்று ஊருக்கு வெளியே வயல் வரப்பிலே கொஞ்சதூரம் சென்றேன். Blue Taile Bee Eater!?! [illegible] பறப்பதைக் கண்டேன். Fan Tailed Streaked Warbler Crip Crip சத்தத்தோடு zig-zag வழியில் மிக மேலே உயரப் பறப்பதைக் கண்டேன். ஒரு புது வகையான Babbler இன் குரலைக் கேட்டேன். காலையில் 7 மணிக்கே நாரைகளும் கொக்குகளும் வயலில் வந்து இறங்குகின்றன. நாரையும் பறவைச் செல்வங்கள் இப்பகுதியில் மிகுதியாக உள்ளது. அடிக்கடி சென்று ஒரு கட்டுரை உருவாக்க வேண்டும்.

19.1.71 இன்று காலை ஊருக்கு மேற்கே செல்லும் சாலையில் சாலையில் சென்றேன். வயல்களில் நெற் பயிர் அறுத்துவிட்டது. நீரில்லை. பறவைகள் அதிகம் இல்லை. புதிதாக ஒன்றும் இல்லை.

24.1.71 இன்று காலை நல்ல மழை பெய்தது. பிற்பகல் ராஜா அவர்களோடு மதுரை ரோடு வழியே பெரிய கண்மாய்க்கு நடந்தே சென்று திரும்பினேன். நிறைய Gulls இருந்தன. ஒரு Tern பாத்தது. நிறைய Cormorants இருந்தன. மாலை 6.10 அளவில் Cormorants கூட்டங்கூட்டமாக தென்கிழக்கு திசை நோக்கிப் பறந்தன. பெரிய கண்மாய் நிறைந்திருப்பதால் ஊரில் உள்ள மரங்களில் நிறைய கொக்குகள் வந்து அடைந்தன. மேலும் மேலும் வந்து கொண்டே இருந்தன. எனக்கு இவற்றைப் பற்றிக் குறிப்புகள் வைத்துக் கொள்ள வேண்டும்.

31.1.1971

இன்று பருவநிலை - நல்லவையம்.

4.00 மணி அளவில் தலைவேஜூர் சென்றேன்

12 Pink Storks ஒருசேரக் கண்டேன். மூன்று வகை நாரைகளும் நீண்டநேரம் உயர (120 எண்ணிக்கை) நீண்டநேரம் சுற்றிச் சுற்றிப் பறந்தன. ஒரு தோடி Pelican (grey in colour) வட்டமிட்டது. நிறைய Cormorants 2500 பறந்தன.

6.00 மணியளவில் பெரிய கண்மாயின் வட எல்லை அடைந்தேன். நிரையில் பல நாரைகள் இருந்தன. பல தென்கிழக்கு திசை நோக்கிச் சென்றன.

6.1.1971 சனி

இன்று மாலை திரு O.A உடன் பெரிய கண்மாய் சென்று பின் மதுரை நோக்கித் திரும்பினேன். பெரிய கண்மாயில் சுமார் ஆயிரம் Pelicans (கூழைக்கடா) கரையருகே நின்றிருந்தது. கொக்குகள் நிறைய அச்சத்தணைந்தலில் அடைந்தன.

8-2-1971

இன்று காலை ஜெகதீசன் காருடன் காவனூர் சென்றேன். கிட்டத்தட்ட நூறு Pink Stork களும் 200 Pelican களும் மரங்களின் கூடுகளில் அமர்ந்திருந்தன. முன்பு மாலையில் சென்றது எவ்வளவு தவறென புரிந்தது. இன்று புகைப்படங்கள் எடுத்தேன். சுமார் 3000 வரை கூழைக்கடாக்கள் பறந்து வந்தன. ~~Peli~~ சில Pelican களும் Stork களும் கூடுகளுக்கு மீன் எடுத்து வந்தன. புதிதாகக் கட்டுவன பழைய கூடுகளைத் திருத்துவனா என்பது புரியவில்லை. நிறைய இடங்களில் கொக்குகள் இருந்தன

திரும்பும் போது பெரிய கண்மாய் கரை வழியே வந்தேன். நாரை பெரிய கூட்டங்கள் மேய்ந்து கொண்டிருந்தன. மொத்தம் 5000 (3000+2000) நாரை பெலிகான்களும் 10000 கொக்குகளும் இருக்க வேண்டும். பல புதிய சிறு பறவைகளை பார்த்தேன்.

தண்மையில் மணலையும் ஓரளவு தண்ணீர்
இருந்தது. நாரைகள் இவ்வொன்றும் அங்
கொன்றுமாக இருந்தன. கொக்குகள்,
Tern, Heron, ~~Sea~~-Gulls ஆகியவை எல்லாம்
தண்ணீரை நோக்கி வந்து கொண்டிருந்தன.
திரும்பும் போது Drongo கூட்டம் கூட்டமாக
in Party of 10 or 12 அமர்ந்திருப்பதைக்
கண்டேன். கழுத்தில் வெண்மைக்கோடுகள்
இருப்பும் வாலில் 4" கம்பியும் உள்ள Bee Eater
களும் 10 அல்லது 12 ஆக கம்பிகளில் அமர்ந்
திருந்தது. ஒரு Indian Pipit ஐயும் அருகே
பார்த்தேன். மைனா ஒன்று பூவரசமரப்
பொந்தில் கொக்காக இரை எடுத்துச்
சென்றது.

மேலே கூட்டம் கூட்டமாக நாரை
களும் Ternகளும் தெற்கிலிருந்து திசை
யிலிருந்து வந்தன.

14.3.1971 ஞாயிறு (காவனூர்)

இன்று காலை சைக்கிளில் OA, VR ஆகியவர்களுடன் காவனூர் சென்றேன். ஏரியில் தண்ணீர் நிறைவு குறையாமல் இருந்தது (1.3.71 அன்று பெய்த 10 cm மழை காரணமாகலாம்). பறவைகள் கூட்டம் கூட்டமாக மரங்களில் 800 to 1000 அமர்ந்திருந்தன. Painted Stork, Grey Pelican ஆகிய இரண்டினங்களே மிகுதி. முன்பு இருந்தது போல் ஆரவாரம் இல்லை. எல்லாப் பறவைகளும் அமைதியாக அமர்ந்திருந்தன. கூடுகள் இல்லாமல் கலைந்து விட்டன. குஞ்சுகள் பெரியன ஆகிவிட்டன போலும். நீர்க்கரையிலிருந்து அடிக்கடி நீர்ப்பின் வந்து அருகாக [illegible] [illegible].

வழியில் ஒருவன் மணிப்புறாவை வைத்துப் புறா பிடித்துக் கொண்டிருந்தான். புறா போலவே கத்தி தூரத்தே அமர்ந்திருக்கும் புறாக்களை அழைத்தான். கட்டுண்ட புறா எழுந்தெழுந்து தவித்தது.

பெரிய கண்மாயில் ஒரு இடத்தில் கொஞ்சம் தண்ணீர் நின்றது.

18.3.1971 (Town)

இன்று மாலை இயல் நிலயம் சென்றிருந்தேன். கூடல் செய்யும் தானியத்தைப் பொறுக்கிக் கொண்டிருந்த காகங்களின் இடையே வந்து அணில்கள் இரண்டு தானியங்களைத் தின்ன வந்தன. காகங்கள் ஓடி ஓடி அந்த அணில்களை விரட்டின. அவை பதுங்கி ஓடி மீண்டும் தைரியமாக வந்தன - இப்படிப் பல முறை நடந்தது.

மாலையில் 6.30 800 பறவை கிழக்கு மேல் (800 to 1100) பெரிய கணமாய் திசையாயிருந்து (from West to East sun set at 6.25) வந்தன. Stripe or Stroke ஆக இருக்க வேண்டும்.

இப்படி

பறந்து பறந்து பின் கூடி நீள வாக்கில் பறந்து பின் இரண்டாகப் பிரிந்து ஒரு பிரிவு மீண்டும் மேற்கே சென்றது. மற்றப் பிரிவும் மறுகு உடனே மேற்கு நோக்கித் திரும்பி விட்டது. பார்க்கக் கண் கொள்ளாக் காட்சியாக இருந்தது. ஆயினும் மனமாறுவது அதைவிட அழகு.

24.3.1971 (தொட்டியவயல் ஊருணி)

நேற்று லட்சுமிபுரம் ஊருணி அருகிலும் இன்று தொட்டியவயல் ஊருணி அருகிலும் காலையில் Binocular ஓடு சென்று பார்த்தேன். இரண்டு காலையிலும் பறவை Activities அதிகமாகவே உள்ளது. Pipits, Robins, Brahminy Mynas, Drongos, Warblers ஆகியன லட்சுமிபுரம் ஊருணி அருகே இருப்பக் கண்டன.

இன்று தொட்டியவயல் ஊருணி அருகே முதன் முதலாக Cuckoo Shrike ஒரு ஜோடி கண்டேன். Pied Cuckoo இரண்டு ஒன்று தவிட்டுக்குருவி (Seven Sisters) கூட்டத்தோடு போவதையும் தவிட்டுக் குருவிகள் அதற்கு இரையூட்டுவதையும் கண்டேன். Pied Cuckoo இன் வெண்மை நிறம் மெருமல் பழுப்பாகவே இருந்தது. இதனை கன்னகறுப்பும் அமையவில்லை.

இன்று Robins தென்படுகின்றன. சாதகங்கள், கறிச்சான், ராபின் ஆகிய இனை சேர்ந்து தொடங்கிவிட்டன. ராபின்கள் பல Territorial Songs பாடியபடி உள்ளன. X

Water hen ஒரு ஜோடி பார்த்தேன். Little Ringed Plovers 20 ஒரு கூட்டமாக அறுவடை ஆன வயலில் மேய்ந்த வண்ணம் இருந்தது.

27.3.71 (பெரியகண்மாய்)

இன்று காலை பெரியகண்மாய்க்குச் சென்றேன். தண்ணீர் 99% வற்றி விட்டது. கரை ஓரத்தில் இடுப்பு மட்டும் உள்ளது. நாற்றுக் கரை தான் கருடன்களும் Paddy Birdsகளும் அமர்ந்து மீன் பிடித்தபடி இருந்தது கண்கொள்ளாக் காட்சி. பறவைகள் மீனை பிடிக்காமல் இருக்க மீன்பிடிக்காமல் இருக்க மீன்பிடிப்பவர்கள் இரண்டு வேட்டு போட்டார்கள். பறவை அதிகம் பயப்படவில்லை. ஒரு சிறுவன் இரண்டு கொக்குகளை ஒரு Cattle Egret & one Little Egret சுட்டுப் போட்டுக் கட்டி வைத்திருந்தான். நாளை சென்று சிறிய பாகப் புகைப்படம் எடுக்கலாம்.

அதிலுள்ள மின்சாரக் கம்பியில் நிறைய Swallowகள் அமர்ந்திருந்தன. மார்பு ஒன்றிரண்டு Rufuous ஆக இருந்தது. மற்றவை மார்பு வெண்மை. சில வாலுக்கு வால் இரண்டு சிறிய கம்பிகள் இருந்தன about one and half inch. மற்றவற்றுக்கு அந்தக் கம்பி இல்லை.

முதன் முறையாக Black Bellied Finch Lark ஒன்று பார்த்தேன். கால்கள் உட்பக்கமாக [illegible] இருந்தன.

28.3.71 (புத்தனேந்தல்).

இன்று அதிகாலை சைக்கிளில் புத்தனேந்தல் சென்றேன். அங்கு எதிர்பார்த்தது போல் பறவைகள் இல்லை. சாம்பல் நிற நாரை (Grey Heron) இரண்டு கண்டேன். பெரிய காட்டு மைனா ஒன்று கண்ணில் தென்பட்டது. Pink Strokes கூட்டம் கூட்டமாக தெற்கு நோக்கிப் பறந்து கொண்டிருந்தது. இன்னும் தூரத்தில் எங்கோ அவை தங்கியிருக்கும் இடங்கள் இருக்க வேண்டும். வரும் வழியில் பெரிய கண்மாயில் நீர் முழுவதுமாக வற்றிவிட்டதைக் கண்டேன். மீண்டும் Black Bellied Finch கண்ணில் தட்டுப்பட்டது.

இன்று மாலை காகங்கள் கூட்டங்கூட்டமாக RDO ஆபீஸ் மரங்களில் ஆரவாரமாக வெகு நேரம் கத்திய படி இருந்தன. மைனாக்களும் காக்கை போல இரவில் கூட்டமாக ஒரே மரத்தில் தங்கும் பழக்கம் உடையனவாக இருக்க வேண்டும். இங்கு மைனாக்களும் காக்கைகளும் ~~ம~~மார்ச் முடிய இனப்பெருக்கம் தொடங்குவதில்லை என்று நினைக்க வேண்டியுள்ளது.

கல்லூரியில் Paddy Bird ஒன்று அடைகாத்து வருகிறது.

31.3.1971

இன்றும் இன்று மனைவியுடன் ~~கொக்கு~~ திருமண காலையில் நேரே சென்று நோக்கி வயல் உளுந்தைப் பக்கம் சென்றிருந்தேன். மீண்டும் Cuckoo Shrike ஐ அதே இடத்தில் அதே வேப்பமரத்தில் இரண்டாவதாகப் பார்க்க நேர்ந்தது. பனங்காடைகள் பல ஆரவாரம் செய்கின்றன. Black Bellied Finch இங்கும் காலத்தில் கண்டேன். எங்கும் கொக்குகளும், Paddy Birds-ம் அதிகமாக உள்ளன.

சின்னாளில் ஒரு Oriole Female கண்டேன். காலையில் ஒரு வேப்பமரத்தில் மீண்டும் Female Oriole கண்டேன். ஆண் பறவை என் கண்ணில் பட வில்லை என்பது வியப்பாக உள்ளது.

மாலை மதுரை ரோடில் ஒரு Paradise flycatcher 7.00 மணிக்கும் தொடர்ந்து எத்தில் படிந்திருந்தது.

காகங்கள் கூடி இரைச்சல் இடுகின்றன. நாளும் இவற்றுக்கும் ஆரவாரமாகக் கூட்டம் கூட்டமாகப் பறந்தும் மாலை நேரத்தில் மரத்தில் அடங்குவதும் அவற்றின் இயல்பு போலும்.

1.4.1971 (மண்டபம் ரோடு)

இன்று காலை மண்டபம் ரோடில் இருந்து கிலோமீட்டர் தூரம் சென்றேன். உடைந்த கொண் புதர்கள். சில காடைகள் என். துவரை வளர்ந்துள்ளது. பறவை Robin, Pipit, Drongo - Pigeon ஆகியன கண்டேன்.

ஒரு மின்சாரவயரில் நிறைய காகங்கள் நெருங்கி நெருங்கி அமர்ந்ததால் கம்பி ஆடி படார் என்ற சத்தத்துடன் ஒரு காகம் இறந்து விழுந்தது. அதையும் இரு நூறு முந்நூறு காகங்கள் கூடி விட்டன.

இன்றுமாலையும் Paradise flycatcher கத்திக் கொண்டிருந்தது.

8.4.1971: சென்ற இரண்டு வாரமாக நல்ல வெயில். ஒரு ~~[illegible]~~வ. காலையில் அதிகம் நான் வெளியே செல்ல வில்லை. Swallow ஒன்றிரண்டே உள்ளன. தற்போது காகங்களின் Breeding ஆரம்பம் ஆனது.

ஆகாயத்தில் நாரைகளைக் காணோம். கொக்குகளும் ~~இரட்டை~~ கரையான்களும் நிறைய எல்லாக் குளங்களிலும் உள்ளன. மீன் கொத்திகளின் ஆரவாரம் அதிகம்.

13.4.71 காவனூர்.

இன்று காலை புறப்பட்டுக் காவனூர் சென்றேன் - சைக்கிளில். கண்மாயில் நீர் முழுவதுமாக வற்றிவிட்டது. இதனால் கொஞ்சம் தேங்கியிருக்கிறது. அதில் மீன் பிடித்தபடி உள்ளனர். கொக்குகள் பெரும் கூட்டமாக உள்ளன. கண்மாய் மரங்களில் ஒரு நீர்ப்பறவையும் காணப்படவில்லை. எல்லாம் போய்விட்டன.

வழியில் Warblers, Finch, Pipits- ஆகியவை நிறைய பார்த்தேன். வடகால் பாலம் அருகே உள்ள அரசமரத்திலிருந்து ஐந்து பெண் Golden Orioleகள் பறந்து சென்றன. ஒரு சிறிய குட்டையில் தண்ணீர் வற்றிச் சேறும் சகதியும் உள்ளதில் நூறு கொக்குகளும் மடையான்களும் இருந்தன. கிட்டே நெருங்கிய உடன் எல்லாம் பறந்து சென்று சற்று தூரத்தில் வயலில் அமர்ந்து கொண்டன. இவையெல்லாம் ஆற்று வாய்க்கால் வழியாலே ஒரு நாள் சென்று பார்க்க வேண்டும்.

தெருவில் ஒரு ஜோடி Sunbirds ஓயாமல் கத்தியபடி உள்ளன. எங்கே கூடுவைக்கப் போகிறதோ. பக்கத்துத் தெருவில் கொக்குகளின் ஒலி நாளுக்கு நாளுக்கு நாள் அதிகமாவதுபோல் தெரிகிறது. புளியமரத்தின் இலைகள் உதிர்வது அதற்கு காரணமாக இருக்கலாம்.

வெயில் நாளுக்கு நாள் அதிகமாகி வருகிறது.